AL/2019/25-B/T-II (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

යුරෝපා ඉතිහාසය II (I කොටස)
ஐரோப்பிய வரலாறு II (பகுதி I)
History of Europe II (Part I)

25 B T II

23.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

ஐரோப்பிய வரலாறு - கிரேக்க - உரோமர் காலம் முதல் கி.பி. 1989 வரை

சுட்டெண் : ........................

**அறிவுறுத்தல்கள் :**

* இப்பகுதி **40** வினாக்களை கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் தரப்படுள்ள **ஐந்து** தெரிவுகளில் **ஒன்று** மட்டுமே சரியானது. அச்சரியான விடையைத் தெரிவுசெய்து தரப்பட்டுள்ள **அறிவுறுத்தல்களுக்கேற்பக் குறிப்பிடுக.**
* இப்பகுதிக்கு **40 புள்ளிகள்** வழங்கப்படும்.
* **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** விடைகளை எழுதிய பின்னர், **பகுதி I** இன் விடைத்தாள்களை **பகுதி II** இன் விடைத்தாள்களுடன் **இணைத்துக் கையளிக்குக.**

## பகுதி I

● **1** தொடக்கம் **10** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ ஒரு காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**1.** (1) அசோவ் (2) அல்ப்ஸ் (3) அப்பினைன்
(4) காக்கோஸஸ் (5) பிரனீஸ் (.........)

**2.** (1) சியூஸ் (2) அதெனா (3) அபுறோடைற்
(4) பொஸிடன் (5) ஜூபிற்றர் (.........)

**3.** (1) முடியாட்சி (2) உயர்குடியாட்சி (3) கடவுள் ஆட்சி
(4) கொடுங்கோலாட்சி (5) ஜனநாயகம் (.........)

**4.** (1) சோலன் (2) சிசரோ (3) பிஸிஸ்றற்றஸ்
(4) கிளிஸ்தெனிஸ் (5) பெரிக்கிளிஸ் (.........)

**5.** (1) தேலஸ் (2) பைதாகோரஸ் (3) டிமோகிறிற்றஸ்
(4) டியோனிஸஸ் (5) ஆர்க்கிமிடிஸ் (.........)

**6.** (1) பாராளுமன்றம் (2) பிரிவு கவுன்சில் (3) ஸ்ரேற்ஸ் ஜெனரல்
(4) றைஸ்ராக் (5) டூமா (.........)

**7.** (1) திரபல்கார் போர் (2) ஓஸ்ரலிற்ஸ் போர் (3) மக்கென்ரோ போர்
(4) ஜெனா போர் (5) லீப்ஸிக் போர் (.........)

**8.** (1) ஏக்-லா-சப்பெல் (2) ரொப்போ (3) லைபாச்
(4) விலா பிறாங்கா (5) வெறோனா (.........)

**9.** (1) லொயிட் ஜோர்ஜ் (2) கிளிமென்சோ (3) வூட்றோ வில்சன்
(4) ஒர்லாண்டோ (5) ரூஸ்வெல்ற் (.........)

**10.** (1) பிரித்தானிய பொதுநலவாயம்
(2) உலக சுகாதார ஸ்தாபனம் (WHO)
(3) வட அத்திலாந்திக் ஒப்பந்த தாபனம் (NATO)
(4) வார்ஸோ ஒப்பந்தம்
(5) ஐரோப்பிய ஒன்றியம் (EU) (.........)

- **11** தொடக்கம் **15** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப் பெயர்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**11.** (1) ஹோமர் - ஒடிஸி
(2) சோபோகிளிஸ் - ஒடிபஸ் றெக்ஸ்
(3) அரிஸ்ரோபேன்ஸ் - முகில்கள் (The Clouds)
(4) சோக்கிரட்டிஸ் - அரசியல் (Politics)
(5) பிளேட்டோ - குடியரசு (The Republic) (.........)

**12.** (1) தொலமி - புவிமையக் கோட்பாடு
(2) கொபர்னிக்கஸ் - சூரியமையக் கோட்பாடு
(3) ஐசாக் நியூட்டன் - பரிணாம வளர்ச்சி கோட்பாடு
(4) மேரி கியூரி - ரேடியத்தின் கண்டுபிடிப்பு
(5) அல்பேர்ட் ஐன்ஸ்ரீன் - சார்பியல் கோட்பாடு (.........)

**13.** (1) வலோய் - பிரான்ஸ்
(2) பிறகன்ஸா - ஸ்பெயின்
(3) ஒரேஞ் - நெதர்லாந்து
(4) றோமனேவ் - ரஷ்யா
(5) சவோய் - இத்தாலி (.........)

**14.** (1) நூற்றாண்டுப் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(2) முப்பதாண்டுப் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(3) ஏழாண்டுப் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(4) கிரிமியன் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(5) ஏழு கிழமை யுத்தம் - பிரான்ஸ் ஒரு பங்காளி (.........)

**15.** (1) ஜோன் லொக் - தனி முதன்மை வாய்ந்த முடியாட்சி
(2) ஜெரமி பெந்தம் - பயன்பாட்டு வாதம்
(3) வி. ஐ. லனின் - பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரம்
(4) லியோன் றொட்ஸ்கி - நிரந்தர புரட்சி
(5) ஜோசப் ஸ்ராலின் - ஒரு நாட்டில் சமதர்மம் (.........)

- **16** தொடக்கம் **20** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் பெயர்/ கூற்று/ காலம் என்பன **X, Y** நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் பெயர்/ கூற்று/ காலம் என்பவை **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோவொரு வகையில் பொருந்தக்கூடியதாகும். எனினும் அவை தரப்பட்டுள்ள வகையில் பொருந்தக் கூடிய முறையில் இல்லை. **Y** நிரல் **X** நிரலுடன் பொருந்தக்கூடிய விதத்தில் ஒழுங்கமைக்கப்பட்டால் கீழே தரப்பட்டுள்ள சேர்மானங்கள் ஐந்தில் **ஒன்று** சரியானதாகும். சரியான சேர்மானத்தினை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**16.**

| X | Y |
|---|---|
| (i) ஹெரகிளிற்றஸ் | A "அனைத்துப் பொருட்களின் அளவீடு மனிதன்" |
| (ii) பிறற்றோகோரஸ் | B "ஒரே ஆற்றில் இரண்டு அடிகள் வைப்பது முடியாத ஒன்று" |
| (iii) சோக்கிரட்டிஸ் | C "ஒவ்வொரு நோய்க்கும் இயற்கையான காரணம் உண்டு" |
| (iv) ஹிப்போகிரட்டிஸ் | D "மனிதன் ஒரு அரசியல் விலங்கு" |
| (v) அரிஸ்ரோட்டல் | E "சீரிய பண்பே அறிவு" |

(1) ABECD (2) AEDCB (3) BAECD (4) BEACD (5) DEABC (.........)

**17.** **X** **Y**

(i) பார்த்தனன் A மொஸ்கோ
(ii) கொலோஸியம் B லண்டன்
(iii) கிராம்ளின் C உரோம்
(iv) வெஸ்ற்மினிஸ்டர் மாளிகை D பாரிஸ்
(v) நோற்றே டாம் தேவாலயம் E எதென்ஸ்

(1) DCEAB (2) DCEBA (3) DEABC (4) EACDB (5) ECABD (.........)

**18.** **X** **Y**

(i) மஸாஸியோ A வீனஸின் பிறப்பு
(ii) பெற்றி செல்லி B ஆதாமும் ஏவாளும் நந்தவனத்திலிருந்து வெளியேற்றப்படல்
(iii) லியனாடோ டாவின்ஸி C பேரரசர் ஐந்தாம் சார்ள்ஸ்
(iv) மைக்கல் ஏஞ்சலோ D இறுதி இராப்போசனம்
(v) ரிற்றியன் E இறுதித் தீர்ப்பு

(1) ABDEC (2) BADEC (3) BAEDC (4) BEACD (5) CDAEB (.........)

**19.** **X** **Y**

(i) றைன் கூட்டமைப்பு A மெற்றர்னிக்
(ii) ஜேர்மன் கூட்டமைப்பு B முதலாம் கெய்சர் வில்லியம்
(iii) வட ஜேர்மன் கூட்டமைப்பு C பிறைறிக் ஈபேற்
(iv) ஜேர்மனிய பேரரசு D பிஸ்மார்க்
(v) வெய்மார் குடியரசு E நெப்போலியன் பொனப்பார்ட்

(1) ACEDB (2) AEDBC (3) DECAB (4) EADBC (5) EDACB (.........)

**20.** **X** **Y**

(i) நெப்போலியன் பொனப்பார்ட் A இரத்தமும் இரும்பும் கொள்கை
(ii) ஓட்டோ வொன் பிஸ்மார்க் B கண்டத்திட்டு முறைமை
(iii) வி. ஐ. லெனின் C சமாதான சக வாழ்வு
(iv) நிகிதா குருச்சேவ் D பிறஸ்ரோறிக்கா அல்லது பொருளாதார மறுசீரமைப்பு
(v) மிகையில் கொர்பச்சோவ் E புதிய பொருளாதாரக் கொள்கை

(1) BAECD (2) CABDE (3) CEABD (4) DECBA (5) EDABC (.........)

● **21** தொடக்கம் **25** வரையான ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று **உரிய தலைப்பிற்கு பொருந்தாதுள்ளது.** அதனை தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**21.** **மானிய முறையும் அதன் அம்சங்களும்**

(1) மத்தியகால ஐரோப்பாவில் நிலவிய அரசியல், பொருளாதார, சமுக முறைமையாகும்.
(2) தாங்கள் வைத்திருந்த நிலத்திற்கு பதிலாகப் போர்க்காலங்களில் இராணுவ வீரர்களை மன்னனுக்குப் பிரபுக்கள் வழங்கினர்.
(3) வலிமையான மத்திய வகுப்பினர்
(4) பண்ணை முறைமை
(5) குடியானவர் முறைமை (.........)

**22.** **இங்கிலாந்தில் பாராளுமன்ற அரசாங்க முறைமையின் வளர்ச்சி**

(1) மன்னன் ஜோன் 1215 இல் மகா சாசனத்தில் கையெழுதத்திட்டமை
(2) 1688 புரட்சியில் மன்னனைப் பாராளுமன்றம் வெற்றிகொண்டமை (அதிகாரத்தில்)
(3) பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் பிரதம அமைச்சர் பதவி முறைமை வேரூன்றியமை
(4) 1832 பாராளுமன்ற சீரதிருத்த விதிகள் மூலம் சர்வசன வாக்குரிமை வழங்கப்பட்டமை
(5) 1911 இல் பிரபுக்கள் சபையின் அதிகாரம் குறைக்கப்பட்டமை (.........)

**23. தேசிய அரசு**

(1) தனிமுதன்மை வாய்ந்த முடியாட்சியில் அதிகாரங்கள் மன்னனை மையமாகக் கொண்டே காணப்பட்டன.
(2) வலிமையான நிலையான இராணுவம்
(3) அங்கீகரிக்கப்பட்ட எல்லைகள்
(4) தேசிய ஒற்றுமை உயர்ந்த அளவில் காணப்பட்டது
(5) ஐரோப்பாவில் முதல் தேசிய அரசு ஜேர்மனியில் தோற்றம் பெற்றது. (.........)

**24. ருஷியப் புரட்சி**

(1) புரட்சிக்கு பிரதான காரணமாக அரசியல், பொருளாதார அடக்கு முறைகளும் சமூக அமைதியின்மையும் காணப்பட்டது.
(2) சார் மன்னருக்கு எதிராக மேலைத்தேச வல்லரசுகள் புரட்சிக்காரர்களுக்கு ஆதரவளித்தமை
(3) தாராண்மை (மென்ஸ்விக்) புரட்சி 1917 மார்ச்சில் இடம்பெற்றது.
(4) ருஷியாவில் அதிகாரத்தைப் போல்ஷ்விக் கட்சியினர் கைப்பற்றினர்.
(5) வி. ஐ. லெனினால் புரட்சி முன்னெடுக்கப்பட்டது. (.........)

**25. பாஸிஸத்தின் பண்புகள்**

(1) கடுந்தேசியவாதம்
(2) பாட்டாளி வர்க்க முறைமையிலான அரசாங்கம்
(3) ஜனநாயகத்திற்கு எவ்வித இடமுமற்ற தனிக்கட்சி அரசாங்கம்
(4) இராணுவ வலிமையும் பலாத்காரமும்
(5) சமாதானமான வெளிநாட்டுக் கொள்கை (.........)

● **26** தொடக்கம் **30** வரையான வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு **மாற்று விடைகள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று அல்லது பல சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளை தெரிவுசெய்து கீழே தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கமைய விடைகளைக் குறிப்பிடுக.

**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் .................................................. **1** எனவும்,
**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் .................................................. **2** எனவும்,
**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் .................................................. **3** எனவும்,
**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் .................................................. **4** எனவும்,
வேறு விடைகளின் எண்ணிக்கை அல்லது சேர்க்கை சரியாயின்.................................. **5** எனவும்

**அடைப்புக் குறியினுள்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரியாயின் |

**26. எதிர்மத சீர்திருத்தம் தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**

(A) உரோம கத்தோலிக்க திருச்சபைக்கு எதிரான இயக்கமாக எதிர்மதச் சீர்திருத்தம் எழுச்சி பெற்றது.
(B) எதிர் மதச் சீர்திருத்தத்தின் ஒரு முக்கிய மூலமாக யேசு சபை காணப்பட்டது.
(C) ஸ்பெயினில் 1479 மத விசாரணை மன்று ஏற்படுத்தப்பட்டது.
(D) புரட்டஸ்தாந்துக் கோட்பாடுகளை றென்றில் கூடிய சபை வரையறுத்து தெளிவாக்கியது. (.........)

**27. கைத்தொழிற் புரட்சி தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**

(A) விவசாயப் பொருளாதார முறைமையிலிருந்து தொழிற்சாலைகளில் இயந்திர சாதனங்கள் மூலமான உற்பத்திகளைக் கொண்ட நகரப்பொருளாதார முறைமைக்கு மாற்றமடைதலே கைத்தொழிற்புரட்சி என அழைக்கப்படுகின்றது.
(B) கைத்தொழிற் புரட்சி உற்பத்தித் திறனையும் பொருளாதார வளர்ச்சியையும் அதிகரித்தது.
(C) கைத்தொழிற் புரட்சி முதன் முதலில் பிரான்ஸில் ஏற்பட்டது.
(D) ஐரோப்பாவில் முழுமையான கைத்தொழில் மயப்பட்ட முதலாவது நாடாகப் போர்த்துக்கல் காணப்பட்டது. (.........)

**28. நெப்போலியன் பொனப்பார்ட் பற்றிய பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**
(A) நெப்போலியன் பொனப்பார்ட் பிரான்ஸியப் புரட்சியின் குழந்தை என அழைக்கப்படுகிறான்.
(B) நெப்போலியன் பொனப்பார்ட் நைல் நதி யுத்தத்தில் இங்கிலாந்தைத் தோற்கடித்தான்.
(C) நெப்போலியன் பொனப்பார்ட் பிரான்ஸியப் பேரரசனாக 1804 இல் முடிசூட்டிக்கொண்டான்.
(D) நெப்போலியன் பொனப்பார்ட் உத்தியோகபூர்வ அரச மதமாக கல்வினிஸத்தை அங்கீகரித்தார். (.........)

**29. ஜேர்மனியை ஐக்கியப்படுத்தல் தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**
(A) ஆஸ்திரியாவின் தலைமைத்துவத்தின் கீழ் ஜேர்மனி ஐக்கியப்படுத்தப்பட்டது.
(B) ஜேர்மனியை ஐக்கியப்படுத்துவதற்கு கார்பனரி இயக்க அங்கத்தவர்கள் பல தடவைகள் முயற்சிகளை மேற்கொண்டனர்.
(C) செல்ஷிவிக், கொல்ஸ்ரின் மீதான யுத்தத்தின்போது 1864 இல் ஆஸ்திரியாவும் பிரஷியாவும் டென்மார்க்கைத் தோற்கடித்தன.
(D) பிரான்ஸிய - பிரஷிய யுத்தம் ஜேர்மனியின் ஐக்கியத்தை பூரணப்படுத்தியது. (.........)

**30. நவபேரரசவாதம் (நவ ஏகாதிபத்தியம்) குறித்துப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**
(A) கைத்தொழிற் புரட்சி நவ பேரரசவாதத்திற்கு வழி அமைத்தது.
(B) மூலப்பொருட்களையும் சந்தை வாய்ப்புகளையும் பெறுவதற்காக ஐரோப்பிய வல்லரசுகளிடையே ஏற்பட்ட கடும் போட்டி காரணமாக நவபேரரசவாதம் தோற்றம் பெற்றது.
(C) நவபேரரசவாதத்தின் விளைவாக ஐரோப்பிய வல்லரசுகளிடையே ஆபிரிக்க கண்டம் பங்குபோடப்பட்டது.
(D) முதலாம் உலகப்போர் ஆரம்பமாவதற்கான ஒரு காரணம் நவபேரரசவாதமாகும். (.........)

● **31** தொடக்கம் **35** வரையான வினாக்களுக்கு சரியான விடையைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தை எதிரேயுள்ள அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**31.** முதலாவது உரோமப் பேரரசனாக கருதப்படுபவர் யார்?
(1) மகா அலெக்சாந்தர் (2) யூலியஸ் சீசர் (3) ஒகஸ்டஸ்
(4) குளோடியஸ் (5) மார்க்கஸ் ஒரோலியஸ் (.........)

**32. 1649** இல் பகிரங்கமாக மரணத்துக்கு உள்ளாக்கப்பட்ட ஆங்கில அரசன் யார்?
(1) முதலாம் ஜேம்ஸ் (2) முதலாம் சார்ள்ஸ் (3) இரண்டாம் சார்ள்ஸ்
(4) இரண்டாம் ஜேம்ஸ் (5) மூன்றாம் வில்லியம் (.........)

**33.** வலுவேறாக்கக் கோட்பாட்டினை முன்வைத்தவர் யார்?
(1) ஜூன் போதின் (2) தோமஸ் ஹொப்ஸ் (3) வால்டெயர்
(4) மொண்டெஸ்கியூ (5) ரூசோ (.........)

**34.** 'போரும் சமாதானமும்' **(War and Peace)** எனும் நூலின் ஆசிரியர் யார்?
(1) ஐவன் துர்கினிவ் (2) பொய்டர் டொஸ்ரோயெவ்ஸ்கி
(3) லியோ ரோல்ஸ்ரோய் (4) ஹென்றிக் இப்சன்
(5) மார்க்ஸிம் கோர்க்கி (.........)

**35.** ஜேர்மன் சமஷ்டிக் குடியரசின் முதலாவது சான்சலர் யார்?
(1) கொன்ட்ராட் அடினோர் (2) வில்லி பிரான்ற் (3) கூட் கீசிங்கர்
(4) ஹெல்மட் சிமித் (5) எரிக் கொனேக்கர் (.........)

- **36** தொடக்கம் **40** வரையிலான வினாக்களில் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருத்தமானதைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 1 | சரியானது | பிழையானது |
| 2 | சரியானது | சரியானது |
| 3 | பிழையானது | பிழையானது |
| 4 | பிழையானது | சரியானது |
| 5 | சரியானது | சரியானதாக இருப்பதுடன் **முதல்** கூற்றை மேலும் விபரிக்கின்றது |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| 36. | கிரேக்க - பாரசீக யுத்தத்தை அடிப்படையாகக் கொண்டு ஹெரடோற்றஸ் எழுதிய தனது 'வரலாறு' என்ற நூலே அவரை 'வரலாற்றின் தந்தை' எனக் குறிப்பிட வைத்தது. | கிரேக்கரிடையே வரலாறு பற்றிய பாடப் பரப்பை அறிமுகப்படுத்திய ஹெரடோற்றஸ் சில சந்தர்ப்பங்களில் தனது மூலாதாரங்களைப் பரிசீலனை செய்து பாரசீக யுத்தத்தில் உண்மையில் என்ன நடந்தது என்பதனைக் கண்டறிவதில் முயற்சி செய்தார். | (………) |
| 37. | பெட்ராக் 'மானிட வாதத்தின் தந்தை' என அழைக்கப்படுகின்றார். | வெஸ்ற்போலியா ஒப்பந்தம் முப்பதாண்டு போருக்கு ஒரு முடிவினை கொண்டுவந்தது | (………) |
| 38. | வஸ்கொடகாமா 1498 இல் கள்ளிக்கோட்டையை வந்தடைந்ததும் "நாங்கள் வாசனைத் திரவியங்களையும் கிறிஸ்தவர்களையும் தேடி கீழைத்தேயம் வந்தோம்" எனக் குறிப்பிட்டார். | உலகை சுற்றி வந்த முதல் கடல் யாத்திரிகராக வஸ்கொடகாமா இனங்காணப்படுகின்றார். | (………) |
| 39. | பிராங்பேட் பாராளுமன்றம் மெற்றானிக்கின் தலைமையின் கீழ் நடத்தப்பட்டது. | ஜேர்மனியை அரசியல் ரீதியாக ஐக்கியப்படுத்துவதற்கு தேவையான பொருளாதார அடிப்படையை சொல்வறைன் அமைப்பு வழங்கியது. | (………) |
| 40. | ஐரோப்பிய ஒன்றியத்தில் பிரித்தானிய நுழைவதற்கு பிரான்ஸிய ஜனாதிபதி டிகோல் ஆதரவு வழங்கினார் | மிகையில் கொர்ப்சேவின் கீழ் ரஷ்யா ஐரோப்பிய ஒன்றியத்தில் அங்கத்துவ நாடாகியது. | (………) |

* *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்

විෂය අංකය பாட இலக்கம் **25B** විෂයය பாடம் **ஐரோப்பிய வரலாறு**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

## I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 1 | 11. | 4 | 21. | 3 | 31. | 3 |
| 02. | 5 | 12. | 3 | 22. | 4 | 32. | 1 |
| 03. | 3 | 13. | 2 | 23. | 5 | 33. | 4 |
| 04. | 2 | 14. | 5 | 24. | 2 | 34. | 3 |
| 05. | 4 | 15. | 1 | 25. | 5 | 35. | 1 |
| 06. | 2 | 16. | 3 | 26. | 3 | 36. | 5 |
| 07. | 3 | 17. | 5 | 27. | 1 | 37. | 2 |
| 08. | 4 | 18. | 2 | 28. | 2 | 38. | 1 |
| 09. | 5 | 19. | 4 | 29. | 4 | 39. | 4 |
| 10. | 2 | 20. | 1 | 30. | 5 | 40. | 3 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 01 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 1 × 40 = 40

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

යුරෝපා ඉතිහාසය II (II කොටස)
ஐரோப்பிய வரலாறு II (பகுதி II)
History of Europe II (Part II)

25 B | T | II

**ஐரோப்பிய வரலாறு - கிரேக்க - உரோமர் காலம் முதல் கி.பி. 1989 வரை**

**அறிவுறுத்தல்கள் :**

- **முதலாம்** வினா கட்டாயமானது.
- **B, C** ஆகிய பகுதிகளிலிருந்து ஆகக் குறைந்தது ஒரு வினாவையேனும் தெரிவுசெய்து **மூன்று** வினாக்களுக்கு விடை தருக. முதலாம் வினா உட்பட விடையளிக்க வேண்டிய வினாக்களின் எண்ணிக்கை **நான்கு** ஆகும்.
- (**முதலாம்** வினாவுக்கு விடையளிப்பதற்கு **ஐரோப்பாவின் புறவுருவப்படம்** வழங்கப்படும்.)

## பகுதி A

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப்படத்தில் கீழே தரப்பட்ட **அனைத்து இடங்களையும் குறித்துப் பெயரிடுக.**

(i) சிசிலி (ii) உரோம்
(iii) அட்ரியாட்டிக் கடல் (iv) டன்யூப் நதி
(v) பாரிஸ் (vi) தேம்ஸ் நதி
(vii) ஜிப்ரொல்டர் நீரிணை (viii) ஆஸ்திரியா
(ix) நெதர்லாந்து (x) சென்ற் பீற்றர்ஸ்பேர்க்
(xi) கிரிமியா (xii) கீல் கால்வாய்

(சரியாகக் குறித்துப் பெயரிடப்படும் ஒவ்வொன்றிற்கும் **01** புள்ளி)

## பகுதி B

**2.** பின்வரும் துறைகளின் கீழ் பண்டைய உரோம கலாசாரத்தின் பிரதான பண்புகளைப் பரிசீலனை செய்க.
(i) இலக்கியம்
(ii) கட்டடக்கலை
(iii) மத மாற்றங்கள் (16 புள்ளிகள்)

**3.** "புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்தம் பலவகைக் காரணங்களினால் தோற்றம்பெற்றது; அவற்றுள் சில அக்கால சமய, அரசியல், பொருளாதார நிலைமைகளோடு நெருங்கிய வகையில் தொடர்பு கொண்டவை"
(i) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்தம் ஆரம்பமான நாட்டினை பெயரிடுக. (01 புள்ளிகள்)
(ii) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்த இயக்கம் எந்த மத நிறுவனத்திற்கு, தலைவருக்கு எதிராக எழுச்சி பெற்றது? (02 புள்ளிகள்)
(iii) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்த இயக்கத்தின் தலைவர்கள் **இருவரைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)
(iv) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்த இயக்கம் ஏற்படுவதற்கு ஏதுவான சமய, அரசியல், பொருளாதார அம்சங்களின் சார்பளவிலான முக்கியத்துவத்தை நுணுக்கமாக ஆராய்க. (11 புள்ளிகள்)

4. (i) பிரான்சியப் புரட்சியின் தோற்றத்திற்கு வழி வகுத்த பிரதான காரணங்களை ஆராய்க.
(ii) பிரான்சியப் புரட்சி பிரான்சிலும் ஐரோப்பாவின் ஏனைய நாடுகளிலும் ஏற்படுத்திய தாக்கத்தைப் பரிசீலனை செய்க.

(16 புள்ளிகள்)

5. பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டிற்கு** அவற்றின் வரலாற்று முக்கியத்துவம் தொடர்பாகச் சிறுகுறிப்பு எழுதுக.
(i) கிரேக்க நகர அரசுகள்
(ii) ஸ்பானியாவால் மேற்கொள்ளப்பட்ட நாடுகாண்பயணங்கள்
(iii) றிச்சிலியூவின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கை
(iv) அமெரிக்க சுதந்திரப் போருக்கான பின்னணி

(ஒவ்வொன்றுக்கும் 08 புள்ளிகள்)

## பகுதி C

6. (i) வியன்னா மகாநாடு மேற்கொண்ட பிரதான தீர்மானங்களை விவரிக்குக.
(ii) நவீன ஐரோப்பிய வரலாற்றில் வியன்னா ஒப்பந்தம் எந்தளவிற்கு ஒரு திருப்புமுனையாக கருதப்படலாம் என்பதனைப் பரிசீலனை செய்க.

(16 புள்ளிகள்)

7. “இத்தாலிய ஐக்கிய இயக்கம் பல தடைகளை எதிர்கொண்டாலும் இறுதியில் வெற்றியிலே முடிவுற்றது.”
(i) “இளம் இத்தாலி” என்ற அமைப்பைத் தாபித்த இத்தாலியத் தலைவர் யார்? (01 புள்ளிகள்)
(ii) இத்தாலியிலே எவ்வகையிலான அரசாங்கத்தை அமைப்பது அவரின் எதிர்பார்ப்பாக இருந்தது? (01 புள்ளிகள்)
(iii) இத்தாலிய ஐக்கியத்திற்கு தலைமைத்துவம் வழங்கிய இத்தாலிய அரசின் பெயர் யாது? (01 புள்ளிகள்)
(iv) இத்தாலிய ஐக்கியத்திற்கு 1815 - 1848 காலப்பகுதியில் தடையாக இருந்தவை பற்றி சிறுகுறிப்பு எழுதுக. (04 புள்ளிகள்)
(v) மேலே (iv) இல் குறிப்பிட்ட தடைகளை வெற்றிகொண்டு, இத்தாலி ஐக்கியத்தை அடைந்த வழிகளைப் பரிசீலனை செய்க. (09 புள்ளிகள்)

8. “இரண்டாம் உலகப் போருக்கான விதைகளை வேர்செயில்ஸ் ஒப்பந்தமே கொண்டிருந்தது.” ஆராய்க.
(16 புள்ளிகள்)

9. பின்வருவனவற்றில் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் பற்றி சிறுகுறிப்பு எழுதுக.
(i) 1848 புரட்சிகள்
(ii) ருஷியாவில் போல்ஷ்விக் புரட்சியின் வெற்றி
(iii) பனிப்போர்
(iv) ஐக்கிய நாடுகள் தாபனம்

(ஒவ்வொன்றுக்கும் 08 புள்ளிகள்)

* * *

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

| | | |
|---|---|---|
| යුරෝපා ඉතිහාසය II<br>ஐரோப்பிய வரலாறு II<br>History of Europe II | 25-B | T |

| | |
|---|---|
| ප්‍රශ්න අංකය<br>வினா இல.<br>Question No. | 1 |

| | |
|---|---|
| විභාග අංකය<br>சுட்டெண்<br>Index No. | ................................ |



# ஐரோப்பிய வரலாறு - கிரேக்க உரோம காலம் முதல் கி.பி. 1989 ஆம் ஆண்டு வரை

**அறிவுறுத்தல்கள் :**

- முதலாம் வினா கட்டாயமானது.
- முதலாம் வினாவுக்கும் B - C பகுதிகளில் இருந்து குறைந்தது ஒரு வினாவையேனும் தெரிவு செய்து, மேலும் மூன்று வினாக்களுக்கும் விடை எழுதுக. (எல்லாமாக நான்கு வினாக்கள்.)

## பகுதி A

**(01) உங்களுக்கு வழங்கப்பட்டுள்ள ஐரோப்பிய புற உருவப்படத்தில் கீழே தரப்பட்ட அனைத்து இடங்களையும் குறித்துப் பெயரிடுக.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (i) | **சிசிலி** | (ii) | **உரோம்** | (iii) | **அட்ரியாட்டிக் கடல்** |
| (iv) | **டன்யூப் நதி** | (v) | **பாரிஸ்** | (vi) | **தேம்ஸ் நதி** |
| (vii) | **ஜிப்ரோல்டர் நீரிணை** | (viii) | **ஆஸ்திரியா** | (ix) | **நெதர்லாந்து** |
| (x) | **சென்பீற்றர்பேர்க்** | (xi) | **கிரிமியா** | (xii) | **கீல் கால்வாய்** |

**(சரியாகக் குறித்துப் பெயரிட்டால் ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி)**

## பகுதி B

**(02) பின்வரும் துறைகளின் கீழ் பண்டைய உரோம கலாசாரத்தின் பிரதான பண்புகளைப் பரிசீலனை செய்க.**

(i) **இலக்கியம்** (ii) **கட்டடக்கலை** (iii) **மத மாற்றங்கள்**

(i) **இலக்கியம்**

- உரோமர்கள் இலக்கியத்தில் முன்னேறி இருந்தார்கள்.
- வேர்ஜில் – ஈனிட் எனும் பெருங்காவியத்தை எழுதினார்
- ஹோரசின் பாடல்கள், வசை பாடல்கள்.
- ஓவிட் கவிஞர் – மெடமோ பொயிஸ் காவியம்.
- லிவி மற்றும் ரசிற்றஸ் – வரலாற்று நூல்
- ஜுவேனல் கவிஞர், புளோட்டஸ் கவிஞரின் ஆக்கங்கள்.

**கட்டடக்கலை**

- உரோமரின் கட்டடக்கலை மிக உன்னத வளர்ச்சி கண்டிருந்ததுடன் பிற்பட்ட கால ஐரோப்பிய வரலாற்றிலும் இது பாரிய தாக்கத்தை ஏற்படுத்தியது.
- கொலோசியம் – விளையாட்டரங்கு
- டயக்கிளிசன்– மாளிகை
- கெரகெல்லாவின் – குளியலறை
- ஒகஸ்டஸ் சீசர் – லிவியா முதலியோரின் – பாரிய அரண்மனை
- உரோமர்களின் கட்டடங்கள், நீண்ட வரவேற்பறை, தெய்வ வழிபாட்டிற்கான அறை, குளியலறை, கண்ணாடி ஜன்னல்கள் என்பவற்றைக் கொண்டதாக அமைக்கப்பட்டிருந்தன.
- பொதுக் கட்டடங்கள், கழிப்பறை, குளியலறை

**மத மாற்றங்கள்**

- கிரேக்கர்களைப் போன்றே உரோமர்களிடமும் பல தெய்வ வழிபாடு நிலவியது.
- ஜூபிடர் (வானத்தின் அதிபதி), மினர்வா (கலை,வர்த்தகம்), மார்ஸ் (யுத்தம்), வீனஸ் (காதல்), நெப்டியூன் (கடல் அதிபதி)
- பேரரசர்கள் தெய்வ அந்தஸ்துடன் மதிக்கப்பட்டனர்.
- உரோமர்களின் கலாச்சாரத்துடன் சமயம் ஒன்றிணைந்து காணப்பட்டது.
- கிறிஸ்தவ சமயம் அறிமுகமான பின் உரோமரின் அரச சமயமாக கிறிஸ்தவ சமயம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.
- கொன்ஸ்டான்ரைன் – கிறிஸ்தவ சமயத்தை ஏற்ற முதல் அரசன்.
- தியோடோசியஸ் – உரோமர்கள் பின்பற்ற வேண்டிய ஒரே ஒரு சமயமாக கிறிஸ்தவ சமயத்தை பிரகடனப்படுத்தியமை.
- பின்னர் பாப்பரசர், உரோமத் திருச்சபை, மற்றும் மதகுருமார்கள் எனும் நிலைக்கு படிமுறையான வளர்ச்சியை அடைந்தது.

**(16 புள்ளிகள்)**

3) **“புரட்டஸ்தாந்து மதச் சீர்திருத்தம் பலவகைக் காரணிகளினால் தோற்றம் பெற்றது, அவற்றுள் சில அக்கால சமய, அரசியல், பொருளாதார நிலைமைகளோடு நெருங்கிய வகையில் தொடர்பு கொண்டவை”**

(i) **புரட்டஸ்தாந்து மதச் சீர்திருத்தம் ஆரம்பமான நாட்டினை பெயரிடுக.**

ஜேர்மனி **(1 புள்ளி)**

(ii) **புரட்டஸ்தாந்து மதச் சீர்திருத்த இயக்கம் எந்த மத நிறுவனத்துக்கு, தலைவருக்கு எதிராக வளர்ச்சி பெற்றது?**

கிறிஸ்தவ சமயம், பாப்பரசர் **(02 புள்ளிகள்)**

(iii) **புரட்டஸ்தாந்து மதச் சீர்திருத்த இயக்கத்தின் தலைவர்கள் இருவரைப் பெயரிடுக?**

மாட்டின் லூதர், உல்ரிச் சுவிங்ளி, ஜோன் கல்வின் **(02 புள்ளிகள்)**

(iv) **புரட்டஸ்தாந்து மதச் சீர்திருத்த இயக்கம் ஏற்படுவதற்கு ஏதுவான சமய, அரசியல், பொருளாதார அம்சங்களின் சார்பளவிலான முக்கியத்துவத்தை நுணுக்கமாக ஆராய்க?**

**சமயம்**

- கத்தோலிக்க சமயத்தில் நிலவிய ஊழல் மற்றும் சீர்கேடுகள். பாப்பரசர்கள் பலர் நியமிக்கப்பட்டமை. இவர்கள் ஆடம்பரமாக வாழ்க்கை நடாத்தியமை. கத்தோலிக்க சமயத்தை மறுசீரமைக்க வேண்டும் எனக் கோரிக்கை விடுக்கப்பட்டாலும் அவற்றை நிராகரித்தமை.
- மறுமலர்ச்சியின் விளைவாக மதகுருக்கள் அல்லாத சாதாரண பிரஜைகளும் பைபிளை வாசிக்கும் வாய்ப்பு கிடைத்தமை. பாப்பரசர் மற்றும் மதகுருக்களின் வாழ்க்கை முறை சமயத்துக்கு முரணானது என்பதைப் புரிந்து கொண்டனர்.

**அரசியல்**

- ஐரோப்பாவில் தேசிய அரசுகள் எழுச்சி பெற்றமை.
- இவ்வரசுகளின் ஆட்சியாளரின் கத்தோலிக்க சமய குழுக்கள் அரசியலில் தலையிடுவதை எதிர்த்தமை.
- ஜேர்மனியில் பரிசுத்த உரோமப் பேரரசுக்கும், பிராந்திய அரசர்களுக்குமிடையில் நிலவிய அரசியல் மோதல்கள்.

**பொருளாதாரம்**

- நாட்டின் பெரும்பாலான நிலங்கள் தேவாலயங்களுக்குச் ( திருச்சபை ) சொந்தமானதாக இருந்தன. இவற்றின் வருமானம், வரி என்பவற்றை திருச்சபையே பெற்று வந்தது. இதில் குறித்த ஒரு தொகை உரோமாபுரிக்கும் அனுப்பி வைக்கப்பட்டது, இதனை அரசர்களும் மத்திய தர வகுப்பினரும் எதிர்த்தனர்.
- இந்நிலையில் மார்டின் லூதர், ஜோன் கல்வின் போன்றவர்களின் கருத்துக்கள் மக்களைப் பெரிதும் சிந்திக்க வைத்தது.

**(11 புள்ளிகள்)**

4)

**(i) பிரான்சிய புரட்சியின் தோற்றத்திற்கு வழிவகுத்த பிரதான காரணங்களை ஆராய்க.**

**அரசியல் காரணி:**

- அதிகாரம் குவிக்கப்பட்ட சர்வதிகார ஆட்சி முறை. ரிச்சல்யூ மசாரின் ஆகியோர், பிரபுக்கள் பெற்றிருந்த பிராந்திய அதிகாரத்தை மன்னனுக்கு கையளித்து, அதிகாரம் குவிக்கப்பட்ட மத்திய அரசாட்சியை ஏற்படுத்தினர்.
- செயற்றிறனற்ற அரச அதிகாரிகள்.
- பலவீனமான ஆட்சியாளர்கள் ஆட்சிப் பீடம் ஏறியமை.
  (14ஆம், 15ஆம், 16 ஆம் லூயி மன்னர்)

**பொருளாதாரக் காரணி:**

- விவசாயத்தை பிரதானமாகக் கொண்ட மானிய முறைப் பொருளாதாரம்.
- வர்த்தகம் ஓரளவு இடம்பெற்றமை.
- நில அடைப்பு முறை ஆரம்பிக்கப்பட்டிருந்தமை.
- புரட்சிக் காலகட்டத்தில் நிலவிய பொருளாதார நெருக்கடி.

**சமூகக் காரணி:**

- பிரான்சிய சமூகம் பிரதானமாக மூன்று வகுப்பாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மத குருக்கள், பிரபுக்கள், சாதாரண பிரஜைகள் (விவசாயிகள்,நகரத் தொழிலாளர்கள்)
- இச்சமூக வகுப்பினர் எதிர்கொண்ட பல்வேறு பிரச்சினைகள்.
- விசேடமாக சாதாரண மக்கள் எதிர்நோக்கிய இன்னல்கள்.
- புரட்சிக்கு முன்னர் பிரான்சில் வாழ்ந்த சிந்தனையாளர்களின் கருத்துக்கள்.
  (வோல்டேயர், மொண்டஸ்கியூ, ரூசோ)

**(16 புள்ளிகள்)**

**(ii) பிரான்சிய புரட்சி பிரான்சிலும் ஐரோப்பாவின் ஏனைய நாடுகளிலும் ஏற்படுத்திய தாக்கத்தினைப் பரிசீலனை செய்க.**

- பிரான்சில் இதுவரை இருந்து வந்த மானிய முறை ஒழிக்கப்பட்டமை.
- பிரபுக்களினதும், மதகுருமார்களினதும் ஆதிக்கம் குறைந்தமை.
- மத்திய தர வகுப்பினர் தமது அரசியல் தேவைகளை நிறைவேற்றிக் கொண்டனர்.

- ஒரே வரி, ஒரே வகையான நிர்வாகம், ஒரே வகையான நீதி முறைகளால் விவசாயிகள் தமது உரிமைகளைப் பெற்றுக்கொண்டனர்.
- முடியாட்சியைத் தோற்கடித்து மக்கள் ஆட்சி ஏற்படுத்தப்பட்டமை.
- மனித உரிமைப் பிரகடனம் வெளியிடப்பட்டமை.
- சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற சிந்தனை தோன்றியமை.
- ஏனைய ஐரோப்பிய நாடுகளிலும் அரசாட்சிக்கு எதிராக செயற்படும் நிலை தோன்றியமை.
- ஐரோப்பாவில், தேசியவாத, லிபரல்வாத சிந்தனைகளால் அரசியல் புரட்சிகள் ஏற்பட்டன.

**(16 புள்ளிகள்)**

**05) பின்வருவனவற்றுள் எவையேனும் இரண்டிற்கு அவற்றின் வரலாற்று முக்கியத்துவம் தொடர்பாகச் சிறு குறிப்பு எழுதுக.**

(i) **கிரேக்க நகர அரசுகள்**
(ii) **ஸ்பானியாவால் மேற்கொள்ளப்பட்ட நாடுகாண் பயணங்கள்.**
(iii) **ரிச்சலியூவின் உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கை.**
(iv) **அமெரிக்க சுதந்திரப் போருக்கான பின்னணி.**

**(ஒரு சிறு குறிப்புக்கு 8 புள்ளிகள் வீதம்)**

(i) **கிரேக்க நகர அரசுகள்**

- ஆரம்ப கால கிரேக்கர்கள், தமது அரசியல், சமூக விடயங்களை தத்தமது பகுதிகளில் நிலவிய நகர அரசுகளின் தன்மைக்கேற்ப வேறுபடுத்தியிருந்தனர். இங்கு ஏராளமான நகர அரசுகள் காணப்பட்டன. ஏதன்ஸ், ஸ்பாட்டா, தீப்ஸ், மெகாரா, கொரிந்த், ஆர்கோஸ், மிலேட்டஸ், சமோஸ் என்பன இவற்றுள் பிரசித்தமானவையாகும்.
- இங்கு காணப்பட்ட நகர அரசுகளில் வெவ்வேறு வகையான ஆட்சி முறைகள் நிலவி வந்துள்ளன.
- மன்னராட்சி / முடியாட்சி - ஆரம்ப ஆட்சி முறையான மன்னராட்சி முறையில் அரசனை கடவுளின் அவதாரமாக மக்கள் மதித்ததுடன் அவன் பிரதான மதகுருவாகவும் நீதிபதியாகவும், படைத்தலைவனாகவும் பல்வேறு சலுகைகளைப் பெற்று வந்தான். கி.மு 8 ஆம் நூற்றாண்டளவில் இது வீழ்ச்சி கண்டது.
- பிரபுக்கள் ஆட்சி - முடியாட்சியின் வீழ்ச்சியின் பின் இது தோன்றியது. சலுகைகளைப் பெற்ற செல்வந்தர்களிடம் அரசியல் அதிகாரம் குவிந்திருந்தது. சமய மற்றும் நிர்வாக நடவடிக்கைகளை இப்பிரபுக்களே முன்னின்று மேற்கொண்டனர்.

- சில்லோர் ஆட்சி – செல்வந்தர் சிலர் தமது நலன்களை மேம்படுத்திக் கொள்ளும் வகையில் மேற்கொண்ட ஆட்சி சில்லோர் ஆட்சியாகும். நிலஉடமை உட்பட சகல அதிகாரங்களும் இவர்களிடம் குவிந்திருந்ததால் மக்கள் பெரும் இன்னல்களை எதிர்கொண்டனர்.

- கொடுங்கோல் ஆட்சி – சில்லோர் ஆட்சியின் கீழ் துன்பத்துக்கு உள்ளான மக்களின் ஆதரவுடன் ஆட்சிக்கு வந்த கொடுங்கோல் / சர்வாதிகாரிகள் கூலிப்படைகளின் ஆதரவுடன் இவ்வாட்சியை மேற்கொண்டு வந்தனர்.

- ஜனநாயக / மக்கள் ஆட்சி – கொடுங்கோல் ஆட்சியின் பின் இது தோன்றியது. இது ஏதன்ஸிலே முதலில் தோன்றியது.

- இங்கு மக்களின் நலன் கருத்திற்கொள்ளப்பட்டுள்ளன. பெரிக்கிளிசின் காலத்தில் இது உன்னத நிலையை அடைந்திருந்தது.

- எக்லீசியா – எனும் பொதுச்சபை இடம்பெற்றது. இதில் வயது வந்த ஆண்கள் அனைவரும் அங்கம் வகித்தனர். இங்கு வாக்குரிமையின் மூலம் முடிவுகள் எடுக்கப்பட்டது.

- பவ்லே – எனும் ஐநூறு பேர் கொண்ட சபை – இச்சபை எக்லீசியாவில் எடுக்கப்பட்ட தீர்மானங்களை நடைமுறைப்படுத்தும் சபையாகும். (கட்டுமானப்பணிகள், வெளிநாட்டுத் தொடர்புகள், விவசாய, வியாபார நடவடிக்கை) இங்கு நிலவிய ஆட்சி முறை நேரடி ஜனநாயக ஆட்சி முறையாகும்.

**சமயம்**

- இயற்கை அம்சங்களிற்கு கடவுள் அந்தஸ்து கொடுத்து வழிபட்டு வந்தனர். எனினும் இவர்கள் கடவுள்கள் பற்றி அச்சமற்று இருந்தனர். கடவுள்களிற்கு மனித உருவங்களை வழங்கி வழிபட்டு வந்தனர்.

- கடவுள்கள் ஒரே குடும்பத்தை சேர்ந்தவர்கள் என நம்பிக்கை கொண்டனர். சியுஸ் – வானத்தின் கடவுள். இதுவே கடவுள்களின் தலைமைக் கடவுளாக வழிபடப்பட்டு வந்தது.

- இக்கால சமய நிலை சுதந்திரமான சிந்தனைகளுக்கு தடையாக அன்றி பல்வேறு வகையான கலைத்துறை வளர்ச்சிக்கும் ஆதரவாக இருந்துள்ளது.

**இலக்கியம்**

- கிரேக்க இலக்கியம் பல்வேறு துறைகளில் வளர்ச்சியடைந்தது.

- வீர காவியம் – ஹோமரின் இலியட், ஒடிசி

- பாடல் காவியம் – பின்டர், செபோ

- நாடகம் – சோகாந்த (ஈஸ்கீலிஸ், சோபோக்ளீஸ், யூரிபிடீஸ் போன்றவர்களின் ) அரிஸ்டோபெனிசின் படைப்பு.

- வரலாற்று நூல் – ஹெரறோட்ரஸ், தூசிடைடிஸ், நூல்கள் ஹெசியட்டின் – வேலையும் நாளும்

**சிந்தனை**

- ஆரம்ப கால சிந்தனையாளராக – மிலேட்டஸ் நகரில் இருந்த தேலிஸ், அனெக்சிமான்டர் மற்றும் அனெக்ஸிமெனிஸ்.

- சொவிட்கள் – விதண்டாவதி

- சோக்ரடீஸ் – பிளேட்டோ, அரிஸ்டோட்டில்

**(8 புள்ளிகள்)**

**(ii) ஸ்பானியாவால் மேற்கொள்ளப்பட்ட நாடுகாண் பயணங்கள்.**

- கிறிஸ்தோபர் கொலம்பஸ் – கரீபியன் தீவுகளை சென்றடைந்தமை.

- அமெரிக்கோ வெஸ்புகூஜி– அமெரிக்கா கண்டத்திற்கு சென்றமை.

- பேர்டினனட் மகெலன் – உலகைச் சுற்றி வலம் வந்தமை.

- பேர்னான்டோ கோடேஸ் – மெக்சிகோவை சென்றடைந்தமை.

- பிரான்சிஸ்கோ பிசாரோ – பேருவை கண்டறிந்தமை.

- மகெலனின் கடற் பயணத்தின் பின் ஸ்பானியர் பிலிப்பைன்சில் தமது அதிகாரத்தை ஏற்படுத்த முயன்றமை.

**(8 புள்ளிகள்)**

**(iii) ரிச்சலியூவின் உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கை.**

- ரிச்சலியூவின் உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகள் இரண்டு பிரதான நோக்கங்களின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டன.
  - பிரான்சிய அரசனின் ஆதிக்கத்திற்கு தடையாக இருந்தவற்றை அகற்றுதல்.
  - பிரான்சை ஐரோப்பாவில் பலம் மிக்க நாடாக மாற்றுதல்.

- பிரான்சிய பிரபுக்களையும், ஹியுகனேற்றுக்களையும் கட்டுப்படுத்தல்.

- பிரான்சின் மத்திய அரசைப் பலப்படுத்தல். முழு நாட்டையும் 32 மாவட்டங்களாக பிரித்து அவற்றுக்கு இன்ரென்டாட் எனும் அதிகாரிகளை நியமித்தான், இவர்கள் நேரடியாக மத்திய அரசுக்கு பொறுப்புச் சொல்ல வேண்டி இருந்தது.

- ஜெர்மனியின் ஹப்ஸ்பேர்க் வம்சத்தவரின் அதிகாரத்தை குறைக்க நடவடிக்கை எடுத்தல்.

- கத்தோலிக்க, புரட்டஸ்தாந்து மோதலில் புரட்டஸ்தாந்து மக்களுக்கு ஆதரவளித்து பரிசுத்த உரோமப் பேரரசின் ஆதிக்கத்தை குறைத்தமை.

**(8 புள்ளிகள்)**

### (iv) அமெரிக்க சுதந்திரப் போருக்கான பின்னணி

- பிரித்தானியா வட அமெரிக்காவில் ஏற்படுத்திய குடியேற்றங்கள் தொடர்பாக கையாண்ட கொள்கைகள்.

  - குடியேற்றங்களின் சட்டவாக்க கழகம் பிரித்தானியாவின் கட்டுப்பாட்டின் கீழ் இயங்கியதுடன், சுங்க வரி விதிக்கும் அதிகாரம் பிரித்தானிய பாராளுமன்றத்திடம் இருந்தமை.

  - குடியேற்றங்களில் நடைமுறைப்படுத்தப்படுகின்ற சட்டங்கள் பிரித்தானிய சட்டதிட்டங்களுக்கு முரணாக இருத்தல் கூடாது, மேலும் இச்சட்டங்களை நடைமுறைப்படுத்த பிரித்தானியாவின் அனுமதி பெறப்பட வேண்டும்.

  - நிர்வாக அதிகாரம் முழுமையாக பிரித்தானியாவிடம் இருந்ததுடன் நீதிமன்ற முறை பிரித்தானிய முறையை ஒத்திருந்தது.

  - பொருளாதாரக் கொள்கை வாணிபவாத நியதிகளில் நடைபெற்றது. குறியேற்றங்கள் தாய் நாட்டின் நன்மைக்காகவே நிறுவப்பட்டுள்ளன என்ற கொள்கையின் கீழ் செயற்பட்டமை.

- குறித்த சில பொருட்கள் பிரித்தானிய சந்தைகளுக்கு மாத்திரம் அனுப்ப வேண்டி இருந்தமை. (தேயிலை, புகையிலை, சீனி, பருத்தி)
  - பிரித்தானியாவிலிருந்து அமெரிக்காவுக்கு கொண்டு வரப்படும் பொருட்களை அமெரிக்காவில் உற்பத்தி செய்வது தடுக்கப்பட்டமை. (கம்பளி, ஆடைகள் )

  - குடியேற்றங்களுக்குத் தேவையான பொருட்கள் பிரித்தானியாவிடம் மாத்திரம் பெறப்பட வேண்டும்.

  - குடியேற்றங்களின் பொருட்களை கொண்டு செல்லவும் குடியேற்றங்களிற்கு பொருட்களை எடுத்து வரவும் பிரித்தானிய கப்பல்களை மாத்திரமே பயன்படுத்த வேண்டும்.

  - இவ்வகையில் பிரித்தானியாவுக்கு தேவையான மூலப்பொருட்களை பெறும் இடமாகவும் முடிவுப் பொருட்களை விற்பனை செய்து கொள்ளும் சந்தையாகவுமே அமெரிக்க குடியேற்றங்களைப் பயன்படுத்தியது.

- இவ்வாறான குடியேற்ற வாத கொள்கைக்கு எதிராக படிப்படியாக எதிர்ப்பு அதிகரித்து போராட்டம் வெடித்தது.

- போராட்டம் வலுப்பெற்றமைக்கான காரணம்
  - குடியேற்றங்களுக்கு தாய் நாட்டின் பாதுகாப்பு தொடர்ந்தும் தேவைப்படாமை. 1756 - 1763 வரையான ஏழு வருடப் போரில் பிரான்ஸ் தோற்கடிக்கப்பட்டதால் குடியேற்றவாசிகளுக்கு பிரான்சின் அச்சுறுத்தல் நீங்கியமை.

  - செவ்விந்தியர்களின் அச்சுறுத்தல்களும் குறைந்தமை.

- இங்கிலாந்து எழுஆண்டுப் போர்ச் செலவுகளை குடியேற்ற மக்களிடம் பெறுவதற்காக புதிய வரிகளை விதித்தமை. டவுன்சன்ட் சட்டம் (கண்ணாடி, முத்திரை, தேயிலை போன்ற பொருட்களுக்கானவரி)

- குடியேற்ற மக்கள் இதற்கு எதிராக மேற்கொண்ட போராட்டத்தால் தேயிலை வரி தவிர்ந்த ஏனைய அனைத்து வரிகளும் நீக்கப்பட்டன.

- இதில் தைரியமடைந்த மக்கள் பொஸ்டன் துறைமுகத்தில் இருந்த தேயிலைக் கப்பலுக்குள் புகுந்து தேயிலைப் பெட்டிகளை கடலில் போட்டு அழித்தமை. (பொஸ்டன் தேநீர் விருந்து)

- 1775 மோதல் ஏற்பட்டமை. 1776 அமெரிக்க சுதந்திர பிரகடனத்தை வெளியிட்டமை. 1783 இல் இங்கிலாந்தை தோற்கடித்து, சுதந்திரத்தை பெற்றுக் கொண்டமை.

**(8 புள்ளிகள்)**

## C பகுதி

**06)**

(i) **வியன்னா மாநாடு மேற்கொண்ட பிரதான தீர்மானங்களை விபரிக்குக.**

- பிரான்சின் தேச எல்லைகளை 1789 இற்கு முன்னர் இருந்த நிலைக்கு மாற்றியமைத்தல், பூர்பன் அரச வம்சத்தை மீண்டும் ஆட்சியில் அமர்த்துதல்.

- ஜேர்மனியில் நிலவிய 360 அரசுகளை 39 அரசுகளாக சுருக்கி ஜேர்மன் கூட்டமைப்பை ஏற்படுத்தி அதன் தலைமையை ஆஸ்திரியாவுக்கு வழங்கியமை.

- ஜேர்மன் பகுதியில் ஆஸ்திரியாவுக்கும் பிரஷ்யாவுக்கும் இடையில் அதிகாரச் சமநிலையை ஏற்படுத்தி ஆஸ்திரியாவுக்கு லொம்பர்ட், வெனிஸ் பகுதிகளும் பிரஷ்யாவுக்கு வேறு பகுதிகளும் வழங்கப்பட்டமை.

- இத்தாலியை மீண்டும் 8 பகுதிகளாக பிரித்து முன்னைய ஆட்சியாளர்களுக்கு வழங்கியமை. (லொம்பார்ட், வெனிசியா, பீட்மன்ட், சாடீனியா, பாமா மொடேனா, டஸ்கனி, பாப்பாண்டவரின் பகுதி நேபிள்ஸ் சிசிலி)

(ii) **நவீன ஐரோப்பிய வரலாற்றில் வியன்னா ஒப்பந்தம் எந்தளவிற்கு ஒரு திருப்பு முனையாக கருதப்படலாம் என்பதை பரிசீலனை செய்க.**

- நெப்போலியனால் மாற்றப்பட்டிருந்த ஐரோப்பிய எல்லைகளை மீண்டும் சீர்படுத்தல்.

- 1815 முதல் 1854 / 56 கிரிமியப் போர் வரை சமாதானத்தை ஏற்படுத்த முடிந்தமை.

- ஐரோப்பிய நாடுகளிடையே ஏற்படும் பிணக்குகளை பேச்சு வார்த்தை மூலம் தீர்த்துக் கொள்ளும்

முறைக்கு வித்திட்டமை.

- மாநாட்டு முறையை அறிமுகம் செய்தமை.

**(16 புள்ளிகள்)**

**7) "இத்தாலிய ஐக்கிய இயக்கம் பல தடைகளை எதிர்கொண்டாலும் இறுதியில் வெற்றியிலே முடிவுற்றது"**

(i) **இளம் இத்தாலி என்ற அமைப்பை தாபித்த இத்தாலிய தலைவர் யார்?**

ஜோசப் மசினி **(1 புள்ளி)**

(ii) **இத்தாலியிலே எவ்வகையிலான அரசாங்கத்தை அமைப்பது அவரின் எதிர்பார்ப்பாக இருந்தது?**

மக்களாட்சி **(1 புள்ளி)**

(iii) **இத்தாலிய ஐக்கியத்திற்கு தலைமைத்துவம் வழங்கிய இத்தாலிய அரசின் பெயர் யாது?**

பீட்மன்ட் – சாடினியா **(3 புள்ளிகள்)**

(iv) **இத்தாலிய ஐக்கியத்திற்கு 1815 - 1848 காலப்பகுதியில் தடையாக இருந்தவை பற்றி சிறு குறிப்பு எழுதுக.**

- பல அரசுகளாக பிரிந்திருந்தமை ( இத்தாலி என்பது பூகோள சொல் மாத்திரமே என மெற்றர்னிக் குறிப்பிட்டான்) அவை வெளிநாட்டு அரச ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தது.
- ஆஸ்திரிய ஆதிக்கம்
- வியன்னா மாநாட்டின் முடிவுகள் (தீர்மானங்கள்)
- பாப்பரசரின் எதிர்ப்பு
- இத்தாலிய மக்களிடையே தேசப்பற்று வளர்ச்சியுறாமை.
- ஐக்கியப்படுத்தும் பொருட்டு, தனிக் கொள்கை ஒன்றை கைக் கொள்ளாது பல்வேறு கொள்கைகளை முன்னெடுத்தமை.

**(4 புள்ளிகள்)**

**(V)மேலே (IV) இல் குறிப்பிட்ட தடைகளை வெற்றி கொண்டு, இத்தாலி ஐக்கியத்தை அடைந்த வழிகளைப் பரிசீலனை செய்க.**

- 1848 ஆம் ஆண்டு இத்தாலிய பகுதிகளில் புரட்சி தொடங்கியமை.

- இப்புரட்சி ஆரம்ப கட்டத்தில் வெற்றியடைந்தமை.

- பாமா, டஸ்கனி, பீட்மன்ட், சாடீனியா பகுதி அரசர்கள் லிபரல் வாத அரசியல் திட்டத்தை ஆதரித்தமை. வெனிஸ், மிலான் பகுதிகளில் இருந்து ஆஸ்திரியர்களை துரத்தியமை.

- பாப்பாண்டவர் உரோமை விட்டு வெளியேறியமை, அத்துடன் புதிய உரோம மக்கள் ஆட்சியில் மசினி ஜனாதிபதியாக நியமிக்கப் பட்டமை.

- இறுதியில் புரட்சி தோல்வியடைந்து முன்னர் ஆட்சி செய்த அரசர்கள் மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றி பண்டைய நிர்வாக முறைகளை மீண்டும் நடைமுறைப் படுத்தியமை.

- படிப்படியாக மீண்டும் ஐக்கியத்திற்கான தலைமைத்துவப் பங்கை கவூர் பெற்றுக் கொண்டமை.
  - பீட்மன்ட் – சாடீனிய பகுதியின் பிரதமராக கவூர் நியமிக்கப் பட்டமை.

  - புத்தாக்க செயற்பாடுகளைக் கையாண்டு இப்பகுதியைப் பலப்படுத்தி, இப்பகுதியின் தலைமையின் கீழ் இத்தாலிய ஐக்கியத்திற்கான முன் ஏற்பாடுகளை மேற்கொண்டமை.

  - படிப்படியாக பீட்மன்ட் – சாடீனிய அரசுகள் யுத்த ஆயத்தங்களை மேற்கொண்டமை. பிரான்சின் III ஆம் நெப்போலியனின் உதவியுடன் ஆஸ்திரியாவுக்கு எதிராக போரிட்டமை. (பிளோம்பியர்ஸ் ஒப்பந்தம்)

- ஆஸ்திரியாவின் ஆதிக்கத்தை வீழ்த்தும் முயற்சி வெற்றி பெற்றமை.
  - 1859 ஆஸ்திரியா, சாடீனியா போரின் பின் லொம்பார்ட் பகுதியை சாடீனியா பெற்றுக் கொண்டமை. பாமா, மொடேனா, டஸ்கனி, ரோமாக்கா, மற்றும் மத்திய இத்தாலி பகுதிகள் பின்னர் சாடீனியாவுடன் இணைக்கப்பட்டமை.

  - 1860 கரிபால்டி சிசிலியின் பகுதிகளைக் கைப்பற்றியமை.

  - 1861 கரிபால்டி தான் கைப்பற்றிய தென் இத்தாலியின் பகுதிகளை விக்டர் இமானுவேலிடம் கையளித்தமை.

  - 1861 ஆம் ஆண்டு விக்டர் இமானுவேல் அரசனை இத்தாலியின் அரசனாக பிரகடனப்படுத்தியமை.

  - 1866 ஆஸ்திரிய – பிரஷ்ய போரின் இறுதியில் பிரஷ்யாவின் ஆதரவுடன் வெனிசியாவைக் கைப்பற்றியமை.

- பாப்பாண்டவரால் ஏற்பட்ட தடைகளை நீக்கியமை.
  - 1870 பிரான்ஸ் - பிரஷ்ய போரின் இறுதியில் இத்தாலிய அரசினுள் உரோம் இணைத்துக் கொள்ளப்பட்டதுடன் இத்தாலிய ஐக்கியம் நிறைவு பெற்றமை.

**(9 புள்ளிகள்)**

**08) "இரண்டாம் உலகப் போருக்கான விதைகளை வேர்செயில்ஸ் ஒப்பந்தமே கொண்டிருந்தது" ஆராய்க.**

- முதலாம் உலகப் போரின் முடிவில் ஜேர்மனியுடன் பலவந்தமாக செய்து கொண்ட உடன்படிக்கைகள் ஜேர்மனியை மோசமாக பாதித்தமை.

- யுத்தத்திற்கான முழுப்பொறுப்பையும் ஜேர்மன் மீது இவ் ஒப்பந்தம் சுமத்தியதுடன் ஜேர்மனிக்கு சொந்தமான நிலத்தில் குறிப்பிட்ட அளவு பகுதிகள் பிரிக்கப்பட்டு பிற நாடுகளுக்கு வழங்கப்பட்டன.
  (அல்சேய்ஸ், லோரைன் பகுதி– பிரான்சிற்கு வழங்கப்பட்டன.)

- ஜேர்மனியின் இராணுவ பலத்தை பாரியளவு குறைத்ததுடன் ஒரு இலட்சத்துக்கு மேற்படாத காலாட்படைகளையும் நீர்மூழ்கிக் கப்பல் இல்லாத கப்பல்ககள் ஆறையும் கொண்ட கடற்படையையும் யுத்த விமானம் இல்லாத விமானப்படை ஒன்றையும் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது.

- யுத்த இழப்பீடு செலுத்துமாறு வற்புறுத்தப்பட்டமை.

- ஜேர்மனியின் சில குடியேற்றப் பகுதிகள் ஐக்கிய நாடுகள் தாபனத்தின் நம்பிக்கைப் பொறுப்புச் சபையின் கீழ் கொண்டுவரப்பட்டது.

- இந்நிபந்தனைகள் இராணுவ மற்றும் பொருளாதார ரீதியில் ஜேர்மனியை பலவீனப்படுத்தியது.

- இதனால் ஜேர்மனியர்கள் வேர்செயில்ஸ் ஒப்பந்தத்தை எதிர்த்தனர்.

- இந்நிலை ஜேர்மனியில் நாசிச வாதம் வளர்ச்சியடையக் காரணங்களாக அமைந்தது.
  (ஹிட்லர் ஒப்பந்தத்தை பகிரங்கமாக கிழித்து எறிந்தமை)

- இவ்வாறான நிலையில் இரண்டாம் உலக யுத்தத்திற்கு ஆரம்ப விதையினை வேர்சேய்ல் ஒப்பந்தம் விதைத்தது, எனலாம்.

- இரண்டாம் உலக யுத்தத்திற்கு ஏதுவான எனைய காரணங்களைக் குறித்து விளக்கப்பட்டிருந்தாலும் மேலதிக புள்ளிகளை வழங்குதல் வேண்டும்.

**(16 புள்ளிகள்)**

**09) பின்வருவனவற்றில் எவையேனும் இரண்டினது வரலாற்று முக்கியத்துவம் பற்றி சிறு குறிப்பு எழுதுக.**

(i) **1848 புரட்சிகள்**

(ii) **ருஷியாவில் போல்ஷ்விக் புரட்சியின் வெற்றி.**

(iii) **பனிப்போர்**

(iv) **ஐக்கிய நாடுகள் தாபனம்**

(i) **1848 புரட்சிகள்**

- 1848 ஆம் ஆண்டு ஐரோப்பாவின் புரட்சி மிக்க ஆண்டாக பேசப்படுகிறது.
- பிரான்ஸ், ஜேர்மன், ஆஸ்திரியா, ஹங்கேரி, மற்றும் இத்தாலி முதலிய நாடுகளின் முக்கியமான நகரங்களில் இப்புரட்சி ஆரம்பமானது.
- தேசியவாதமும், லிபரல் வாதமும் இப்புரட்சி ஏற்படுவதற்கான பிரதான பின்னணிக் காரணியாக அமைந்தது.
- படித்த புத்திஜீவிகள் இப்புரட்சிக்கு தலைமைத்துவம் வகித்தனர். (புத்திஜீவிகளின் புரட்சி)
- நகரங்களில் மாத்திரம் இவை முன்னெடுக்கப்பட்டதுடன் கிராமப்புறங்களுக்கு இவை விஸ்தரிக்கப்படவில்லை.
- இறுதியில் இப்புரட்சி தோல்வியடைந்தமை – நீண்ட கால விளைவுகளை ஏற்படுத்தியது.
- 1789 இல் தோன்றிய ஐரோப்பிய புரட்சிகள் 1848 இல் முடிவுற்றமை.
- வியன்னா மாநாட்டுத் தீர்மானங்களால் ஐரோப்பிய புரட்சிகள் 1848 இல் முடிவுற்றமை.
- வியன்னா மாநாட்டுத் தீர்மானங்களால் ஐரோப்பாவில் தேசியவாத உணர்வு அதிகரித்தமை.
- பிரான்ஸ், ஆஸ்திரியா, முதலிய நாட்டுத் தலைவர்கள் இத் தேசியவாத புரட்சிக்கு எதிராக செயற்பட்டமை.
- எனினும் ஐரோப்பாவில் பரவிய இச்சிந்தனைகளை கட்டுப்படுத்த முடியவில்லை.
- அரசு தலையிடா பொருளாதார கொள்கை, லிபரல்வாத (தாராண்மை) அரசியல் சிந்தனை என்பவற்றைக் கொண்ட மத்திய வகுப்பினரின் ஆதரவு இருந்தமை.
- எனினும் மெற்றர்னிக்கின் இராணுவ நடவடிக்கை, புரட்சிக்காரர்கள் திட்டமிட்டு செயற்படாமை போன்ற காரணிகளால் இப்புரட்சி தோல்வியடைந்தது.

**(8 புள்ளிகள்)**

(ii) **ரஷியாவில் போல்ஷிவிக் புரட்சியின் வெற்றி**

**போல்ஷவிக் புரட்சி ஏற்பட்டமைக்கான காரணங்கள்**

- சர்வாதிகார ஆட்சிகளின் செயற்பாடுகள்
- முதலாம் உலக யுத்தத்தில் ஈடுபட்டு அதில் ரஷ்ய ராணுவம் தோல்வியடைந்தமை.
- ரஷ்யாவின் பொருளாதாரம் நலிவடைந்தமை.
- ரஷ்யாவில் நிலவிய பஞ்சமும், வேலையில்லாத் திண்டாட்டமும்.
- தொழிலாளர்,விவசாயி,மத்தியவகுப்பினர்கள் என்ற சமூக பகுப்பு நிலவியமை.
- சமவுடைமை சிந்தனையின் வளர்ச்சி.

**போல்ஷிவிக்கினருக்கு வெற்றி பெற்றமைக்கான காரணம்**

- சோவியட் சபை மற்றும் தற்காலிகமாக அரசாங்கத்துடன் ஏற்பட்ட எதிர்ப்பு.
- தொழிலாளர், விவசாயிகளைக் கொண்ட இன்னல்பட்ட மக்களுக்கு உதவ முன்வந்தமை
- ரஷ்யா முழுவதும் நிலவிய வேலைநிறுத்தம்.
- லெனின், ட்றொஸ்கி என்போரின் சிறந்த தலைமைத்துவம்.
- போல்ஷிவிக்குகளின் பலமான கட்டமைப்பு
- உலகில் முதலாவது சமவுடமை அரசு தோன்றியமை.

**(8 புள்ளிகள்)**

(iii)**பனிப்போர்**

- இரண்டாம் உலக யுத்தத்தின் பின்னர் அமெரிக்காவின் தலைமையின் கீழ் மேற்கு ஐரோப்பிய முதலாளித்துவ அணியும் ரஸ்யாவின் தலைமையில் கிழக்கு ஐரோப்பிய நாடுகளை ஒன்றிணைத்த சமவுடமை அணிக்கும் இடையில் ஏற்பட்ட கருத்து மற்றும் இராஜதந்திர அரசியல் ரீதியிலான மோதல் பனிப்போர் எனப்படும்.
- இதன் ஆரம்பம் பற்றி பல்வேறு கருத்துக்கள் நிலவினாலும் 1945முதல் 1991 வரை இது இடம்பெற்று வந்துள்ளது.

- பனிப்போரின் பிரதான பண்புகள்.
  - அமெரிக்காவும் சோவியத்தும் ஒன்றை ஒன்று எதிரளூத்து மேற்கொண்ட கருத்து பரிமாற்றம்.
  - இரண்டு அணிகளுக்கும் இடையில் நிலவிய சந்தேகம் மோதலாக மாறியமை.
  - சோவியத் ரஸ்யா சமவுடமைக் கொள்கையை உலகம் முழுவதும் பரப்புவதற்கு முயற்சிப்பதாக குற்றம் சாட்டிய அமெரிக்கா அதனைக் கட்டுப்படுத்த முயன்றமை.

- அரசியல் பொருளாதாரக் கருத்துக்களை மையமாகக் கொண்டு ஒன்றை ஒன்று விமர்சித்து தமது அணியைப் பலப்படுத்திக் கொள்ளவும்.இரகசிய உளவுச்சேவையின் மூலம் எதிரணி பற்றிய தகவல்களைப் பெற்றுக் கொள்ளவும் தமது அணி நாடுகளுக்கு பொருளாதார மற்றும் யுத்த உதவிகளை வழங்குதல் ( ட்ருமன் நியதி, மார்ஷல் திட்டம், கோமிங்டாங் ) அமெரிக்கா, ரஷ்யா நாடுகள் புதிய ஆயுதங்களை உற்பத்தி செய்வதில்(அணு ஆயுதம், ஏவுகணை, விமானம், செய்மதி) போட்டி போட்டு செயற்பட்டன.

- 1948 பெர்லின் பிரச்சினை , 1950 கொரியப் பிரச்சினை என்பன பனிப்போரின் உச்சநிலைக்கு இரு அணிகளையும் கொண்டு சென்றது.

- 1949 நேட்டோ - மேற்கு ஐரோப்பிய நாடுகளை யுத்த ரீதியில் பயன்படுத்தியது. இதற்கு எதிராக சோவியத்தின் வார்சோ ஒப்பந்த அமைப்பு செயற்பட்டது.

- என்டோ,சீயாட்டோ (தென்கிழக்கு ஆசிய பாதுகாப்பு ஒப்பந்தம்) ஆகிய ஆசிய நாடுகளை ஒன்றிணைத்த ஒப்பந்தங்கள் மேற்கொள்ளப்பட்டன.

- ஐக்கிய நாடுகள் சபையில் இரு நாடுகளும் தமது வீட்டோ அதிகாரத்தை பயன்படுத்தி பனிப்போரில் ஈடுபட்டமை.

- 1985 மிகையில் கொர்பசோவ் சோவியத்தின் ஜனாதிபதியான பின் இரு அணிகளினதும் கருத்து மோதல் சற்று தளரத் தொடங்கி சோவியத் வீழ்ச்சியின் பின் இந்நிலை முற்றாக நீங்கியது.

**(8 புள்ளிகள்)**

(iv) **ஐக்கிய நாடுகள் தாபனம்**

- 1945 ஏப்ரல் முதல் யூன் வரை இடம் பெற்ற சான்பிரான்சிஸ்கோ மாநாட்டில் ஐக்கிய நாடுகள் தாபனத்திற்கான கோரிக்கை பிரகடனம் வெளியிடப்பட்டது.

- 1945 ஒக்டோபர் 24ம் திகதி ஐக்கிய நாடுகள் தாபனம் ஏற்படுத்தப்பட்டது.

- இதன் கட்டமைப்பு - இது 06 அமைப்புக்களைக் கொண்டுள்ளது.
  1. செயலகம்
  2. பாதுகாப்புச்சபை
  3. பொதுச்சபை
  4. பொருளாதார சமூக சபை
  5. சர்வதேச நீதி மன்றம்
  6. நம்பிக்கைப் பொறுப்புச் சபை.

**நோக்கம்**

- சர்வதேச சமாதானத்தையும் பாதுகாப்பையும் பேணல்.

- நாடுகளிடையே நட்புறவை ஏற்படுத்தல்.

- பொருளாதார, சமூக, கலாசார, மனிதாபிமான அணுகுமுறைகளில் தீர்வுகளை பெற்றுக் கொடுத்தல்.

- மனித உரிமை, அடிப்படை உரிமை என்பவற்றை உறுதிப்படுத்த சர்வதேச ஒத்துழைப்பைப் பெற்றுக் கொள்ளல்.
- இப்பொதுக் குறிக்கோள்களை நிறைவேற்றிக் கொள்ள ஒன்றிணைந்து செயற்படல்.

- ஐக்கிய நாடுகள் தாபனம் உலக சமாதானத்தைப் பாதுகாக்க பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. கொங்கோவின் உள்நாட்டு யுத்தம் மேற்கு நியூகினியா தொடர்பாக ஒல்லாந்து மற்றும் இந்தோனேசியாவுக்கிடையில் ஏற்பட்ட பிணக்கு போன்ற பெரிய வல்லரசுகள் பங்குபற்றாத பிணக்குகளை தீர்த்துவைத்துள்ளது.

- ஐக்கிய நாடுகள் தாபனம் முன்னின்று தீர்த்துவைத்த பிணக்குகளில் சில.
  - 1946 ஆம் ஆண்டு ஒல்லாந்து நிர்வாகத்திலிருந்து கிழக்கு இந்தியத் தீவுகள் சுதந்திரத்தைப் பெற்றுக் கொண்டமை.
  - பலஸ்தீன் - இஸ்ரேல் பிரச்சினை (முழுமையாகத் தீர்வு காணப்படவில்லை)
  - 1950-1953 கொரியப் பிரச்சினை
  - 1956 சுயெஸ்கால்வாய் பிரச்சினை
  - 1956 ஹங்கேரியப் பிரச்சினை
  - பெல்ஜியம் கொங்கோ சிவில் யுத்தம்
  - சைப்பிரஸ் பிரச்சினை
  - காஷ்மீர் பிரச்சினை
  - 1968 செக்கோஸ்லோவாக்கியா பிரச்சினை
  - 1979 ரஸ்ய - ஆப்கான் பிரச்சினை

**(08 புள்ளிகள்)**